(ii) எல்லா யானைகளும் கொம்பன் யானைகள் அல்ல.
கொம்பன் யானைக்கு அதிக விலை கிடைக்கும்.
ஆகவே, ஒவ்வொரு யானைக்கும் அதிக விலை கிடைக்காது.
('எல்லா A யும் B அல்ல' என்பதனை 'சில A, B அல்ல' எனும் குறை மறை எடுப்பாக நீர் எடுத்துக்கொள்ளலாம்.) (04 புள்ளிகள்)

**சுருக்கத்திட்டம்**

F – a யானைகள்

G – a கொம்பன் யானை

H – a அதிகவிலை கிடைக்கும்

**குறியீட்டாக்கம்**

$$Vx(Fx\wedge \sim Gx).\wedge x(Gx\rightarrow Hx)\therefore \wedge x(Fx\rightarrow\sim Hx)$$

$Vx(Fx\wedge \sim Gx)$

$\wedge x(Gx\rightarrow Hx)$

$\sim \wedge x(Fx\rightarrow\sim Hx)$

$(Fy\wedge \sim Gy)$

$Fy$

$\sim Gy$

$(Gy\rightarrow Hy)$ வாய்ப்பற்றது.

$Vx\sim(Fx\rightarrow\sim Hx)$

$\sim(Fz\rightarrow\sim Hz)$

$Fz$

$\sim Hz$

சுருக்கத்திட்டத்துடன் கூடிய குறியீடாக்கம் – 02 புள்ளிகள்
உண்மை விருட்ச வழி நிறுவல் – 02 புள்ளிகள்

**5.** (அ) உமது சுருக்கத்திட்டங்களைத் தந்து பின்வரும் வாதங்களை வகுப்படிப்படையில் குறியீட்டாக்கம் செய்து அவற்றின் வாய்ப்பினை வென்வரிப்படம் மூலம் துணிக.

(i) எந்தவொரு வாகனமும் பதிவு செய்யப்படாமலில்லை.
எந்தவொரு திருமணமும் பதிவு செய்யப்படாமலில்லை.
ஆகவே, சில திருமணங்கள் வாகனங்களாகும்.

**சுருக்கத்திட்டம்**

A – வாகன வகுப்பு

B – பதிவு செய்யப்பட்டிருத்தல் வகுப்பு

C – திருமண வகுப்பு

$A\cap B=\varnothing$

$C\cap B=\varnothing$

$\overline{\phantom{C\cap A}}$

$C\cap A\neq\varnothing$




வாய்ப்பற்றது. (02 புள்ளிகள்)

(ii) எல்லாப் பிள்ளைகளும் அன்பானவர்கள்.
சில பிள்ளைகள் குழப்பகரமானவர்கள்.
ஆகவே குழப்பகரமானவர்கள் சிலர் அன்பானவர்கள்.

A - பிள்ளைகள் வகுப்பு
B - அன்பானவர் வகுப்பு
C - குழப்பகரமானவர் வகுப்பு




$$A \cap \overline{B} = \varnothing$$
$$A \cap C \neq \varnothing$$
$$\overline{C \cap B \neq \varnothing}$$

வாய்ப்பானது

சுருக்கத்திட்டத்துடன் கூடிய குறியீட்டாக்கம் – 1 புள்ளி
வரைபடம் – 1 புள்ளி

(ஆ) பின்வருவன ஒவ்வொன்றிலும் இடம்பெற்றுள்ள போலியினை இனங்கண்டு, விளக்குக.

(i) பறவைகள் மனிதர்களை விட அதிகளவில் உள்ளன.
இந்தக் கிளி ஒரு பறவையாகும்.
ஆகவே, இந்தக் கிளி மனிதர்களை விட அதிகம் உள்ளது.

பிரிப்புப் போலி

பறவைகள் எனும் முழுமைக்குரிய பண்பை அதிலடங்கும் தனியான இந்தக் கிளிக்கு வழங்கப்பட்டுள்ளதால் பிரிப்புப் போலி ஏற்பட்டுள்ளது.

(ii) எமது காடுகளிலுள்ள பெறுமதிமிக்க மரங்களை வெட்டுவதனால் எமது தாவர வகைகளை Y அழிக்கின்றான் என X கூறினார். ஆனால் அது ஒரு பொய். ஏனெனில், X தனது வீட்டிற்கு அருகிலுள்ள பலா மரத்தினை வெட்டுவதற்காக விற்பனை செய்ததை நான் கண்டேன்.

ஆள் நியாயப் போலி

X கூறிய கருத்தினை தர்க்க ரீதியாக மறுப்பதற்கு பதிலாக அவரது நடத்தையினை எடுத்துக்காட்டுவதன் மூலம் வாதிடுபவர். தனது கருத்தினை நிரூபிக்க முயல்கின்றார்.

(iii) நாம் எல்லோரும் புகழ்மிக்கவர்களாக முடியாது. ஏனெனில், நாம் அனைவரும் அந்தளவு பிரபல்யத்தைப் பெற்றுக் கொள்ள முடியமையாகும்.

முடிவு மேற் கோடற் போலி

எடுகூற்றில் குறிப்பிடப்பட்டுள்ள விடயம் பிறிதொரு வடிவில் முடிவிலும் குறிப்பிடப்பட்டுள்ளது.

(iv) ஜனாதிபதி சட்டத்தரணி நீதிபதியைப் பார்த்து பின்வருமாறு கூறினார். "கனம் நீதிபதி அவர்களே, குற்றம் சுமத்தப்பட்டிருப்பவரிடம் நீ இப்போது உன் மனைவியை அடிப்பதை நிறுத்தி விட்டாயா? என நான் வினவியபோது அதற்கு அவர் "ஆம்" எனக் கூறினார். அவ்வாறாயின் அவர் தனது மனைவியை அடித்ததனை ஒப்புக்கொண்டுள்ளார். ஆகவே அவர் தண்டிக்கப்படல் வேண்டும்."

பல்வினா போலி / சிக்கல் வினா போலி

"ஆம்" என்றோ "இல்லை" என கூறினாலும் குற்றத்தை ஒப்புக்கொண்டதாகவே கருதப்படும்.

போலியினை இனங்காண்பதற்கு – 02 புள்ளிகள்
விளக்கம் – 01 புள்ளி

**6.** (அ) பின்வருவன பற்றிச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) சட்டமும் ஒழுங்கும்

மனிதனின் செயற்பாடுகளை கட்டுப்படுத்தும் விதிகளின் தொகுப்பே சட்டமாகும். மனித சமூகம் ஒழுங்காக நடந்து கொள்வதற்கு சட்டம் துணை நிற்கின்றது.

நேர்மையானதும் ஒழுக்கமானதுமான சமூகம் ஒன்றினை உருவாக்கும் நோக்கில் சட்ட விதிமுறைகள் அறிமுகப்படுத்தப்படுவதோடு பின்பற்றப்படுதலும் அவசியமாகும். (02 புள்ளிகள்)

(ii) சட்டரீதியான செயன்முறைகளில் அளவையியலின் பயன்பாடு

சட்ட ரீதியான செயன்முறைகளில் மனிதன் ஈடுபடுவது அவனது சிந்தனையின் சீரான தன்மையினை பொறுத்தே அமைகின்றன. சிந்தனைப் பிறழ்வுகள் அல்லது ஒழுங்கற்ற சிந்தனை சட்டத்திற்கு முரணாக அவனை நடக்கச் செய்கின்றது.

அளவையியல் சட்ட செயன்முறைகளை உருவாக்குவதற்கு உய்த்தறி, தொகுத்தறி முறைகள் பின்பற்றப்படுகின்றன. நீதிமன்ற தீர்ப்புக்களின் போது உய்த்தறி மற்றும் தொகுத்தறி முறைமைகள் பின்பற்றப்படுகின்றன என்பதுடன் சாட்சியங்களை நெறிப்படுத்துகின்ற போது தர்க்க ரீதியாக வாதம் புரிவதற்கான பயிற்சியினை அளவையியல் வழங்குகின்றது என்பதனையும் குறிப்பிடலாம்.

(02 புள்ளிகள்)

(iii) குற்றமும் சமூகமும்

சட்டத்தை பின்பற்றாது நடக்கும் போது குற்றமாகக் கொள்ளப்படுகின்றது அல்லது சட்டத்தை மீறுவது குற்றமாகும். மனிதன் சமூகப் பிராணி சமூகமும் சூழலும் ஒருவனை நல்லவனாகவோ கெட்டவனாகவோ மாற்றுவதற்கு வாய்ப்பினை ஏற்படுத்துகின்றது. இதனால் சமூகத்தில் சட்டத்தினை மீறி ஒருவன் நடப்பது குற்றமாகக் கருதப்பட்டு சமூகத்தால் ஒதுக்கப்படும் நிலை காணப்படுகின்றது. குற்றம் அதிகரிப்பதும் குறைவடைவதும் சமூகத்தின் வகைப் பொறுப்பாக உள்ளது. குற்றவியல் தண்டனை கோவை சட்டமூலம் பல்வேறு குற்றங்களுக்குரிய தண்டனைகளை பிரேரிப்பதுடன் குற்றமிழைத்தவர்களுக்கு அதன் வழியே தண்டனை வழங்கப்படுகின்றது.

(02 புள்ளிகள்)

(ஆ) பின்வருவனவற்றுக்கிடையிலான தொடர்பு பற்றிச் சுருக்கமாக ஆராய்க.

(i) அளவையியலும் மொழியும்

அளவையியல் சிந்தனை பற்றிய விஞ்ஞானமாகும். சிந்தனையினை வெளிப்படுத்துவதற்கு மனிதனுக்குத் தேவைப்படுவது மொழியாகும். மொழியின் வடிவமே அளவையியலில் எடுப்பாகவும் வாதமாகவும் காணப்படுகின்றன. மேலும் இயற்கை மொழியில் பொதுவாக காணப்படுகின்ற கவர்பாடு, அர்த்த வேறுபாடு போன்றவற்றை நிவர்த்தி செய்வதற்காகவே குறியீட்டு மொழி அறிமுகப்படுத்தப்பட்டது. எனவே சாதாரண மொழியும் குறியீட்டு மொழியும் அளவையியலில் பயன்படுத்தப்படுவது இயல்பாகும்.

(02 புள்ளிகள்)

(ii) அளவையியலும் கணிதமும்

அளவையியல் கணிதத்தில் பயன்படுத்தப்படும் மாறி, மாறிலிகள், அடைப்புக்குறிகள் போன்ற குறியீடுகளை பயன்படுத்துகின்றது. அவ்வாறே இவை இரண்டும் வடிவ விஞ்ஞானங்களாகவும் காணப்படுகின்றன. சமகால அளவையியல் வளர்ச்சியில் அட்சர கணிதத்தின் பங்களிப்பு குறிப்பிடதக்கதொன்றாகும். அவ்வாறே தர்க்கப் படலை எண்ணக்கருவும் கூட அளவையியலுக்கும் கணிதத்திற்கும் இடையேயான தொடர்பினை வெளிப்படுத்தி நிற்கின்றது எனலாம்.

(0 2புள்ளிகள்)

(iii) அளவையியலும் கணினி விஞ்ஞானமும்

அளவையியலில் தரவுகள் வழங்கப்பட்டு அதிலிருந்து உட்கிடையாக முடிவினைப் பெறுகின்றது. அவ்வாறே தரவுக்கும் முடிவுக்கும் இடையே தொடர்பு காணப்படுகின்ற வகையில் வாத உருவாக்கமும் காணப்படுகின்றது. இதே போன்று கணினி விஞ்ஞானத்திலும் கொடுக்கப்படும் தரவுகளுக்கு ஏற்ப முடிவு கிடைக்கப் பெறுகின்றன. கனிணி விஞ்ஞானத்தின் வழியே அறிமுகப்படுத்தப்பட்டுள்ள டிஜிட்டல் தொழில்நுட்பத்தின் ஓர் அங்கமாகவும் அளவையியல் நுணுக்கங்கள் பின்பற்றப்படுவதனைக் குறிப்பிடலாம்.

(02 புள்ளிகள்)

(இ) (i) 'மலட்டுப் பெண் அவளது மகனுடன் திரையரங்கில் இருந்தாள்.'
இக்கூற்றின் தர்க்கரீதியான இயல்பினை ஆராய்க.

பகுப்பாய்வு நிலை பொய்யாகும். ஏனெனில் இவ்வாக்கியத்தில் மொழி ரீதியான அர்த்தமானது பரஸ்பரம் முரண்பட்ட நிலையினை தோற்றுவிப்பதனால் இவ்வாறான ஒரு முடிவு எட்டப்படுகின்றது.

(02 புள்ளிகள்)

(ii) இரண்டுடன் இரண்டினைக் கூட்டும்போது நான்கு ஆகும் என்பதில், 'ஆகும்' எனும் சொல்லின் கருத்து யாது?

ஒருமை நிலை உண்மையாகும். (Identical Truth) ஏனெனில் குறித்த வெளிப்பாட்டில் பரஸ்பரம் ஒருமைத் தன்மை வலியுறுத்தப்படுகின்றது. (02 புள்ளிகள்)

## பகுதி III

**7.** (அ) விஞ்ஞானரீதியான, விஞ்ஞானரீதியற்ற கூற்றுகளுக்கிடையேயான பொப்பரின் வேறுபாட்டு கட்டளைக்கல்லினைக் குறிப்பிட்டு, ஒரு கூற்று விஞ்ஞானரீதியானதாக அமைவதற்கு அது கொண்டிருக்க வேண்டிய நிபந்தனைகளைத் தெளிவுபடுத்துக. (04 புள்ளிகள்)

அனுபவ சோதனைகள் மூலம் பொய்ப்பித்தலுக்கு இடமளிக்கக்கூடிய அறிவே விஞ்ஞானம் ஆகும் என்பது விஞ்ஞானத்திற்குரிய உரைகல்லாகும். இவ்வுரைகல்லின் படி ஒரு அறிவு விஞ்ஞானமாக ஏற்றுக் கொள்வதற்கு பின்வரும் பண்புகளை (கட்டளைகளை) கொண்டிருக்க வேண்டும்.

- கவர்பாடற்ற மொழி நடையில் மிகவும் தெளிவாக கூறப்பட்டிருத்தல் வேண்டும்.
- அனுபவ ரீதியாக சோதிக்கக்கூடியதாக இருத்தல் வேண்டும்.
- சோதனையின் மூலம் பொய்ப்பித்தலுக்கு இடமளிக்கக் கூடியதாக இருத்தல் வேண்டும்.

இதனடிப்படையில் காள்பொப்பர் விஞ்ஞான அறிவு வளர்ச்சிக்கு முடிவில்லை எனக் குறிப்பிடுகின்றார். எந்தவொரு விஞ்ஞானியும் ஒரு விஞ்ஞானக் கோட்பாட்டை அறுதியாக நிறுவ முடியாது என்ற விடயங்களை முற்கற்பிதமாகக் கொண்ட காள்பொப்பர் அதன் அடிப்படையில் பொய்ப்பித்தல் வாதம் என்ற முறையினை முன்வைத்தார். பொய்ப்பித்தல் வாதம் உய்த்தறி முறைக்குரிய கட்டமைப்பினைக் கொண்டுள்ள போதிலும் அது தொகுத்தறிப் பண்பினையும் கொண்டுள்ளது. பொய்ப்பித்தல் கோட்பாட்டில் எதிர்வுகூறலைப் பெறுவதற்கு முதன்மை அம்சம், உப கருதுகோள் முதலியவற்றைப் பயன்படுத்துகின்றது. பொய்ப்பித்தல் கோட்பாட்டில் அனுபவ சோதனைகள் பயன்படுத்தப்படுவது தொகுத்தறி பண்பினைக் காட்டுகிறது. பொய்ப்பித்தல் முயற்சியில் தப்பித்து நிற்கும் ஒரு கருதுகோள் மேலும் உறுதியடைவது தொகுத்தறி பண்பினைக் காட்டுகின்றது. இந்த வகையில் அனுபவ சோதனைகளின் மூலம் பொய்ப்பிப்பதற்கு இடமளிக்கக்கூடிய அறிவே விஞ்ஞானம் ஆகும் எனவும் அனுபவ சோதனைகளின் மூலம் பொய்ப்பிப்பதற்கு இடமளிக்காதவை விஞ்ஞானம் அல்லாதவை என்பதே பொப்பரின் கருத்தாகும்.

(ஆ) "பொப்பரின் நோக்கில் சமூக விஞ்ஞானங்கள் பொய்ப்பிக்கக்கூடியவை அல்ல." சமூக விஞ்ஞான ஆய்வுகளில் எழுகின்ற வினாக்களான அர்த்தம், எதிர்வுகூறல், சோதனை நடத்துதல் என்பவற்றைக் கருத்திற்கொண்டு இக்கூற்றை ஆராய்க. (06 புள்ளிகள்)

காள்பொப்பரின் கருத்தில் சமூக விஞ்ஞானங்கள் பொய்ப்பிக்கக் கூடியவை அல்ல ஏனெனில் சமூக விஞ்ஞான ஆய்வுகளில் எழுகின்ற பிரதான வினாக்களில் ஒன்றாக சமூக விஞ்ஞான எண்ணக்கருக்களின் அர்த்த பாவனை அமைந்துள்ளது. சமூக விஞ்ஞான எண்ணக்கருக்கள் பொதுவாக கவர்பாடான தன்மையைக் கொண்டதாகவும் அர்த்த வேறுபாட்டுத் தன்மையைக் கொண்டதாகவும் பரந்த அளவிலான விடயப் பரப்பை உள்ளடக்கியதாகவும் காணப்படுவதால் தெளிவானதும் திட்டவட்டதுமான அர்த்த விளக்கத்தினை இவ்வெண்ணக்கருக்களில் இருந்து பெறுவது சிரமமாகும்.

சமூக விஞ்ஞான தோற்றப்பாட்டிற்கும் கருதுகோளிற்கும் இடையே நுட்பமான தொடர்பினை ஏற்படுத்த முடியாத நிலையானது கருதுகோளில் இருந்து எதிர்வு கூறலைப் பெறுதல் எனும் நிலையில் சிரமங்களை ஏற்படுத்துகின்றது. மேலும் எதிர்வு கூறலும் கூட சில வேளையில் "சுய தோல்வி தரும் எதிர்வு கூறலாக" அமைந்துவிடுகின்றது.

சோதனை எனும் வகையில் சமூக விஞ்ஞானங்களில் கட்டுப்பாடான சோதனை முறைமைகள் சாத்தியம் இல்லை. மாறாக கட்டுப்பாடற்ற சோதனை முறை குறிப்பாக அவதானம் மட்டுமே பெருமளவு சாத்தியம். அவதான சோதனை முறை அகவயப் பண்பு சார்ந்தது ஆதலால் திரட்டப்படும் தரவுகள் எந்தளவுக்கு நம்பகத்தன்மை உடையது என்பதும் கேள்விக்குரியதே.

இவ்வாறான காரணங்களினால் பொதுவாக காள்பொப்பர் சமூக விஞ்ஞானங்கள் விஞ்ஞானங்கள் அல்ல என கூறுகின்றார்.

அர்த்தம், எதிர்வுகூறல், சோதனை ஆகியவற்றை நியாயப்படுத்துவதற்கு 2 புள்ளிகள் வீதம் மொத்தம் 06 புள்ளிகள்

(இ) தூய விஞ்ஞானத்திற்கும் பிரயோக விஞ்ஞானத்திற்கும் இடையிலான வேறுபாட்டினை ஆராய்க. இலங்கை போன்ற நாடுகளில் இடம்பெறுகின்ற தற்கொலை போன்ற சமூகப் பிரச்சினைகள் தொடர்பாக நிகழ்த்தப்படும் அனுபவம்சார்ந்த ஆய்வுகளை தூய விஞ்ஞானமாகவும் பிரயோக விஞ்ஞானமாகவும் கருத முடியுமா? (06 புள்ளிகள்)

அறிவை வளர்ப்பதனை மட்டும் நோக்கமாகக் கொண்ட விஞ்ஞானம் தூய விஞ்ஞானம் ஆகும்.
உதாரணம் : பௌதீகவியல், உளவியல், இரசாயனவியல்

தூய விஞ்ஞானத்தின் மூலம் பெற்ற அறிவினைப் பயன்படுத்தி மனித தேவைகளை நிறைவேற்றுவதை நோக்கமாகக் கொண்ட விஞ்ஞானம் பிரயோக விஞ்ஞானம் ஆகும்.
உதாரணம் : உளச்சிகிச்சை, தொழினுட்பவியல்

தூய விஞ்ஞானம் பிரயோக விஞ்ஞானம் சார்ந்த அறிவினை சமகால சமூகப் பிரச்சினைகளுக்கு தீர்வு பெற்றுக் கொள்வதற்காக பிரயோகிக்கக் கூடியதாக இருக்கலாம் என்பதை அறிய முடிகின்றது.

உதாரணம் : இலங்கையில் சமகாலத்தில் பாரியதொரு சமூகப் பிரச்சினையாக தற்கொலை இருப்பதனை சுட்டிக்காட்டலாம். பொதுவாக தற்கொலைக்கான காரணங்களாக சமூகம், உளநிலை, பொருளாதாரம் போன்றவைகள் அடையாளப்படுத்தப்படுகின்றன. தற்கொலைக்குரிய உளவியல் காரணங்களாக விரக்தி, மன அழுத்தம், குற்ற உணர்வு, கவலை, கோபம், தாழ்வுச்சிக்கல் போன்ற காரணிகள் குறிப்பிடப்படுகின்றன. இக்காரணிகள் பொதுவாக ஒருவரின் ஆளுமை, பிறழ்வான நடத்தை போன்ற பின்னணியுடன் தொடர்புடையவை. உளவியலில் இங்கு குறிப்பிடப்பட்டுள்ள பின்னணி தொடர்பாக கொள்கைகள் மற்றும் கோட்பாடுகள் தற்கொலைக்கான காரணத் தேடலின் போது பிரயோகிக்கப்படுகின்றன. இவ்வாறான பிரயோகங்கள் தூய விஞ்ஞானப் பண்பினைக் காட்டி நிற்கின்றன.

மறுபுறம், உளச் சிகிச்சை எடுத்துக் கொண்டால் இதில் தற்கொலை தொடர்பாக பிரயோக அறிவின் பாவனை இருப்பதனைக் காணலாம். தற்கொலைக்கு முயற்சித்தவர்கள், தற்கொலை புரிந்து தப்பித்தவர்கள் யோசிப்பவர்கள் போன்றவர்களுக்கான உளவள ஆலோசனை அத்துடன் உள நோயாளர்களுக்கான உளச் சிகிச்சை போன்றவை உளவியலின் வழியே பெற்றுக்கொள்ளப்பட்ட விதி மற்றும் கோட்பாடுகளின் பிரயோகிப்பின் வழியே நிகழ்த்தப்படுகின்றது. ஆழ் துயில் நிலை சிகிச்சை (Hypnatism) உளச்சிகிச்சையில் சிறந்ததொரு பிரயோக விஞ்ஞான பிரயோகமாகும்.

(06 புள்ளிகள்)

தூய விஞ்ஞானம், பிரயோக விஞ்ஞானம் என்பவற்றைக் குறிப்பிடுவதற்கு – 2 புள்ளிகள்

சமூக விஞ்ஞானப் பிரச்சினைகளுக்கு தூய விஞ்ஞான, பிரயோக விஞ்ஞான என்பவற்றின் பிரயோகத்தை குறிப்பிடுவதற்கு – 4 புள்ளிகள்

**8.** (அ) விஞ்ஞான ஆய்வுகளில் கருவிகளின் வகிபாகத்தை விபரமாக ஆராய்க. (06 புள்ளிகள்)

விஞ்ஞானத்தில் குடுவைகள், பரிசோதனைக் குழாய்கள், கரண்டிகள் போன்ற எளிய உபகரணங்கள் தொடக்கம் விண்கலன்கள், செயற்கைக் கோள்கள் போன்ற சிக்கலான அமைப்பினைக் கொண்ட பாரிய உபகரணங்கள் வரை பெருந்தொகையான கருவிகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. விஞ்ஞானத்தில் கருவிகளின் பயன்பாடுகள் பின்வருவனவாகும்.

1. விஞ்ஞானத்தில் அவதானங்களைச் செய்வதற்கு கருவிகள் பயன்படுத்தப்படுகின்றது. இதன் மூலம் நேரடியாக புலக்காட்சிக்கு உட்படுத்த முடியாத நேர்வுகளை மிகத் தெளிவாகவும் துல்லியமாகவும் நோக்க முடியும்.
   உதாரணம் : நுணுக்குக்காட்டி, தொலைக்காட்டி

2. விஞ்ஞானத்தில் பரிசோதனைகளைச் செய்வதற்கு கருவிகள் பயன்படுத்தப்படுகின்றது. இதன் மூலம் காரணிகளைக்கட்டுப்படுத்திதோற்றப்பாடுகளுடன்தொடர்புடையகாரணிகள், காரணிகளுக்கிடையிலான தொடர்புகள் போன்றவற்றை அறிந்துக் கொள்ள முடியும்.
   உதாரணம் :
   பொயிலின் விதியை உறுதிப்படுத்தும் பரிசோதனைகளில் கருவிகள் பயன்படுத்தப்படுகின்றது.

3. விஞ்ஞானத்தில் அளவீடுகளைச் செய்வதற்கு கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. இதன் மூலம் பண்பு ரீதியான இயல்புகளை அளவு ரீதியாக அறிந்து கொள்ள முடியும்.
   உதாரணம் : வெப்பமானி, தராசு, அளவுகோல்

4. விஞ்ஞானத்தில் அளவீடு அல்லாத தேவைகளுக்காகவும் கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன.
   உதாரணம் : நீலப்பாசிச் சாயத்தாள், ஆவியாக்கல் வடித்தல் உபகரணம், முக்கோண அரியம் சில வேளைகளில் அளத்தலுக்காகப் பயன்படுத்தப்படும் கருவி, அடிமட்டம் போன்றவையும் அளவீடல்லாத தேவைகளுக்காகப் பயன்படுத்தப்படுகின்றன.

பொதுவாக விஞ்ஞான ஆய்வுகளில் மேற்குறிப்பிடப்பட்டது போல் கருவிகள் பயன்படுத்தப்பட்டிருப்பினும் கூட சில விஞ்ஞான ஆய்வுகளுக்காக பிரத்தியேகமாக வடிவமைக்கப்பட்ட கருவிகள் பல உருவாக்கப்பட்டதும் விஞ்ஞான வரலாற்றில் காணக்கூடியதாக உள்ளது.

உதாரணம் : லூயி பாஸ்டர் தன்னிச்சைப் பிறப்புக் கொள்கையை நிரூபிப்பதற்காக விசேடமாக வடிவமைக்கப்பட்ட உபகரணம் ( அன்னக்கழுத்து பரிசோதனைக் குடுவை ) வடிவமைத்ததனைக் குறிப்பிடலாம்.

இயற்கை விஞ்ஞான ஆய்வுகளைப் போன்று சமூக விஞ்ஞான ஆய்வுகளிலும் சமகாலத்தில் கருவிகளின் பாவனை அதிகரித்துள்ளன எனக் கூறலாம். குறிப்பாக கள ஆய்வுகள் இடம்பெறும் சந்தர்ப்பங்களில் கருவியின் பாவனை அதிகரித்துள்ளது.

உதாரணம் : புகைப்படக் கருவி, வீடியோ பதிவுக் கருவி, C.C.TV கமரா, பதிவுக் கருவி சமூக விஞ்ஞான ஆய்வுகளுக்கும் இயற்கை விஞ்ஞான ஆய்வுகளுக்கும் பெரிதும் துணைபுரிகின்ற அவதான கருவிகளாகும்.

(ஆ) "விஞ்ஞானமானது இறுதியில் எமது புலக்காட்சியின் மீது தங்கியிருப்பினும்கூட கோட்பாட்டுரீதியான அறிவே விஞ்ஞான அறிவினைக் கட்டியெழுப்புவதுடன் அதனை முன்கொண்டு செல்கின்றது." இது பற்றிய உமது அவதானங்களை முன்வைக்குக. (06 புள்ளிகள்)

விஞ்ஞான அறிவின் அடிப்படை அனுபவ ரீதியான தரவுகளின் மீது தங்கியுள்ளது எனலாம். குறித்த அடிப்படை ஒரு புறம் இருப்பினும் கூட விஞ்ஞான ரீதியான அறிவானது பல்வேறு வகைகளில் மென்மேலும் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டும் கட்டியெழு.ப்பப்படுகின்றது.

1. புலன் வழியேயான அவதானங்கள் கோட்பாட்டு ரீதியானதாக அமைந்திருப்பதனால் கோட்பாடுகளும் அதனுள் உள்ளடங்கியுள்ளன.

2. யாதாயினும் ஓர் கருத்து அல்லது கோட்பாடு தொடர்பாக சோதனை நிகழ்த்தப்படும். எனவே அவதானத்தின் மூலம் கிடைக்கப் பெறுகின்ற தரவுகள் அதாவது குறித்த கோட்பாட்டின் வழியே கிடைக்கப் பெற்ற தரவுகள் கோட்பாட்டின் மீதும் தங்கியுள்ளன.

3. மேற்குறிப்பிட்ட விடயங்களுடன் இன்று சார்பு வாதிகள் கட்டளைப் படிமம் உருவாகின்றன எனக்கூறுகின்றனர். விஞ்ஞானத்தினைப்போன்று அதன் விடயங்களும் முன்சென்று உருவாக்கப்படுவது கட்டளை படிமம் தொடர்பான விடயங்களின் அடிப்படையிலேயே என கூறப்படுகின்றது.

4. இவை அனைத்தையும் விட ஆரம்பத்தில் பௌதீகச் செயற்பாடுகள் மற்றும் இறுக்கமான அனுபவ ரீதியான தரவுகளின் மீது விஞ்ஞானம் கட்டியெழுப்பப்பட்ட போதிலும் இன்று பௌதீக விஞ்ஞானங்கள் பிரயோக ரீதியான அனுபவங்களைக் கடந்து சென்று விட்டன. கோட்பாட்டு ரீதியான பௌதீக விஞ்ஞானத்தில் "புறவயமான தரவுகள்" எமது புலத் தோற்றப்பாட்டுக்கு உட்படாத இலத்திரன்கள் ஆகின்றன.

5. ஒரு தடவை ஒளி அணு வடிவிலானது மீண்டும் ஒரு தடவை அது அலை வடிவிலானது என குறிப்பிடப்பட்டது. இன்று அது அணுவோ அலை வடிவமோ அல்லாத பதார்த்தம் ஒன்றினால் உருவாக்கப் பட்டுள்ளது எனக் கூறப்படுகின்றது.

முன்பு சூரியன் எம்மைச் சுற்றி செல்கின்றது என்பதனை நாம் கண்டோம் இன்று பூமி சூரியனைச் சுற்றி செல்கின்றது என அறிகின்றோம். எமது விஞ்ஞான அறிவு புலன் அனுபவக் கருத்துக்களின் மீதா அல்லது கோட்பாட்டின் வழியேயான கருத்துக்களின் மீதா தங்கியிருக்கின்றது என்பது வினாவிற்குரிய ஒன்றாகும்.

(06 புள்ளிகள்)

(இ) விஞ்ஞானத்தில் காட்டுருக்களின் வகிபாகத்தினை ஆராய்க. (04 புள்ளிகள்)

காட்டுரு என்பது ஒப்புமை அனுமானத்தோடு தொடர்புபட்ட ஓர் எண்ணக்கருவாகும். சாதாரண நடைமுறை அர்த்தத்தில் யாதாயினும் ஒன்றிற்கு வடிவ அடிப்படையில் ஒப்புவித்துக் காட்டுகின்ற ஒன்றே காட்டுருவாகும். இக்காட்டுரு இரு வகைப்படும்.

1. பௌதீகக் காட்டுரு
2. கணித ரீதியான காட்டுரு

1. விஞ்ஞானிகள் சிக்கலான கோட்பாடுகளை எளிமையான முறையில் ஒப்பீடு செய்து விளக்குவதற்கு காட்டுருக்களைப் பயன்படுத்திக் கொள்கின்றனர்.

   உதாரணம் :

   ரத போட், ஞாயிற்றுத்தொகுதியின் கட்டமைப்பு, இயக்கம் என்பவற்றோடு ஒப்பீடு செய்து அணுவின் கட்டமைப்பு, இயக்கம் என்பவற்றை விளக்கிக் காட்டினார். இங்கு ஞாயிற்றுத்தொகுதி காட்டுருவாக பயன்படுத்தப்பட்டுள்ளது.

2. புதிய விஞ்ஞானக் கோட்பாடுகளை உருவாக்குவதற்கு விஞ்ஞானிகளுக்கு காட்டுருக்கள் பயன்படுகின்றன.

   உதாரணம் :

   பௌதீகப் பொருட்களின் ஈர்ப்பினை காட்டுருவாகக் கொண்டு புவியீர்ப்புக் கோட்பாடு உருவாக்கப்பட்டன. கெல்வின் பிரபு புவியீர்ப்புக் கோட்பாட்டினைக் காட்டுருவாகக் கொண்டு வெப்பக் கடத்தல் தொடர்பான கோடட்பாட்டினை உருவாக்கியமை.

3. இன்று விஞ்ஞானக் கோட்பாடுகளை உருவாக்குவதற்கு விஞ்ஞானத்தில் கணித ரீதியான காட்டுருக்கள் பயன்படுகின்றன என்பதை அறியக்கூடியதாக இருக்கிறது. DNA மரபணுக் கட்டமைப்பு கண்டுபிடிப்பு, அணுவின் கட்டமைப்புக் கண்டுபிடிப்பு என்பன முறையியல் ஆய்வில் காட்டுருக்கள் வெற்றிகரமாக பயன்படுத்தப்படுவதற்கு சிறந்த உதாரணங்களாகும். கட்டிட நிர்மாணவியலில் காட்டுருக்களின் பங்களிப்பு குறிப்பிடதக்கது.

**9.** (அ) (i) விஞ்ஞானக் கொள்கைகள் எவற்றை விளக்குகின்றன? (04 புள்ளிகள்)

1. பொதுவாக விஞ்ஞானக் கொள்கைகள் இயற்கையில் நிகழ்கின்ற தோற்றப்பாடுகளை விளக்கக் கூடியதாக உள்ளன.

   உதாரணம் : தகனம் எவ்வாறு நிகழ்கின்றது எனும் தோற்றப்பாட்டினை ஒட்சியாக்கக் கொள்கை விளக்குகின்றது.

2. விஞ்ஞானக் கொள்கைகள் விஞ்ஞான விதிகளையும் விளக்கவல்லனவாக உள்ளன. விஞ்ஞானக் கொள்கை பரந்தளவினதாக உள்ளதால் ஒரு கொள்கையின் கீழ் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட விதிகள் விளக்கம் பெறலாம்.

   உதாரணம் : நியூற்றனின் புவியீர்ப்புக் கோட்பாட்டின் வழியே நியூற்றனின் அசைவு பற்றிய விதிகள், கலிலியோவின் விழும் பொருள் விதி என்பன விளக்கம் பெற்றன.

3. கொள்கையின் கீழ் விதிகள் விளக்கப்படினும் கூட குறித்த கொள்கை மாற்றமடைய நேரிட்டால் ஏற்கனவே குறித்த கொள்கையினால் விளக்கம் பெற்ற விதிகள் மாற்றமடைய வேண்டிய அவசியமில்லை.

(04 புள்ளிகள்)

(ii) நோக்குக்கொள்கை விளக்கம் என்றால் என்ன? (04 புள்ளிகள்)

யாதேனும் ஒரு நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு முன்வைக்கப்படுகின்ற விளக்கம் நோக்குக் கொள்கை விளக்கமாகும். நோக்குக் கொள்கை விளக்கத்தில் காரியம் முன்னதாகவும் காரணம் பின்னதாகவும் கூறப்படுவது இயல்பாகும்.

உதாரணம் : அந்த தாய் உயிருடன் இருப்பது தன் பிள்ளையின் எதிர்கால வாழ்க்கைக்காகவே.

(02 புள்ளிகள்)

(ஆ) "சமூக விஞ்ஞானக் கொள்கைகள் விளக்கம் தருவன அல்ல. எவ்வாறாயினும் அங்கு வழக்கமாக உய்த்தறி விளக்கமும் சாத்தியமில்லை." ஆராய்க. (08 புள்ளிகள்)

சமூக விஞ்ஞானங்களில் மனித நடத்தையுடன் தொடர்புபட்ட விடயங்களை ஆய்வுப் பொருளாகக் கொண்டு ஆராய்கின்ற ஒரு துறையாகும். பொதுவாக மனித நடத்தையானது விருப்பு வெறுப்பு முற்தீர்வு, சுயநல மனப்பான்மை, பக்கச்சார்பு போன்ற பண்புகளுடன் கூடியதான ஒன்றாகும். சமூக விஞ்ஞான எண்ணக்கருக்கள் தெளிவின்மை நிகழ்விற்கும் கருதுகோளுக்குமிடையிலான தொடர்பின்மை வெற்றிகரமான எதிர்வு கூறலை நிகழ்த்த முடியாமை, போன்றவை சமூக விஞ்ஞானத்தில் விளக்கமளித்தலில் எனும் நிலைக்கு இட்டுச் செல்வதற்கு தடையான காரணிகளாக உள்ளன.

மறுபுறம் உய்த்தறி அடிப்படையிலான நிரூபித்தல், மற்றும் வாய்ப்பு பார்த்தலும் கூட இங்கு வழக்கமாக சாத்தியமில்லை. ஏனெனில் தோற்றப்பாட்டினை விளக்குவதற்கு ஏற்ற வகையிலான பொது விதிகள், பொது கொள்கைகள் சமூக விஞ்ஞானத்தில் சாத்தியமில்லை என்பதுடன் நேர்வுகளை உட்கிடையாக்கி காட்டுவதும் கூட இங்கு சாத்தியமில்லை.

எனவே தான் சமூக விஞ்ஞானம் குறித்த நிகழ்வு அல்லது தோற்றப்பாடு எவ்வாறு நிகழ்கின்றதோ அல்லது நிகழ்ந்ததோ அதனை அவ்வாறு விளங்கிக் கொள்ளுதலை மட்டுமே நிகழ்த்துகிறது. அவ்வாறாக விளங்கிக் கொள்ளப்பட்டவற்றிற்கு வெவ்வேறான வியாக்கியானங்களை வழங்குவது சமூக விஞ்ஞானத்தில் ஓர் பொதுவான நிகழ்வாக மட்டுமன்றி பலவீனமாகவும் அடையாளப்படுத்தப்படுகின்றது.

சமூக விஞ்ஞானத்தில் விளக்கங்கள் சாத்தியமில்லை என்பதை குறிப்பிடுவதற்கு 3 புள்ளிகள்
உய்த்தறி விளக்கங்கள் சாத்தியமில்லை எனக் குறிப்பிடுவதற்கு 3 புள்ளிகள்
விமர்சனம் 2 புள்ளிகள்

10. (அ) “உயர்நிலை விஞ்ஞானக் கோட்பாட்டின் மாற்றமானது கெஸ்ட்டால்ட் மாற்றத்தை அல்லது வளைந்துகொடுப்பதை அடிப்படையாகக் கொண்டது.” சார்புவாதிகளான கூன், பயராபாண்ட் போன்றோர் பயன்படுத்துகின்ற கூற்றுக்களான ‘கோட்பாட்டு மாற்றத்தில் நியாயம் பகுத்தறிவு கிடையாது’, ‘கட்டளைப்படிமங்களில் வாய்ப்புப் பார்த்தலோ பொய்ப்பித்தலோ சாத்தியமில்லை’, ‘அடுத்தடுத்த கோட்பாடுகளுக்கிடையே தொடர்புகள் சாத்தியம் இல்லை’ போன்றவையே மேற்குறித்த முடிவிற்கு இட்டுச் செல்கின்றன என்பதை எடுத்துக்காட்டுக. (12 புள்ளிகள்)

உயர் நிலை விஞ்ஞானக் கோட்பாடு மாற்றமடைவதன் அடிப்படையானது கெஸ்ரால் மாற்றம் அல்லது அதற்கு வலைந்துக் கொடுப்பது எனும் வெளிப்பாடானது தோமஸ் கூன் என்பவரின் விஞ்ஞானப் புரட்சியின் கட்டமைப்பு எனும் நூலில் உள்ளடக்கமான ஒன்றாகும். இங்கு கெஸ்ரோல் மாற்றம் எனக் குறிப்பிடப்படுவது என்னவெனில் புதியதொரு கட்டளைப் படிமம் ஒன்று தோன்றியதும் விஞ்ஞானி ஒருவனுக்கு மேலும் பழைய கட்டளைப் படிமத்தில் இருந்து செயற்பட முடியாத நிலை ஏற்படும். அவனுக்கு முழுமையாகவே பிறிதொரு எண்ணக்கரு அடிப்படை மற்றும் உலக நோக்குடன் கூடியதாக தனது பணியை ஆற்ற வேண்டியிருக்கும். இது கெஸ்ரோல் படம் ஒன்றில் ஒரு தடவை அன்னத்தின் முகத்தை பார்க்கையில் முயலின் முகத்தை மறந்து விடுவதும் பின்பு முயலின் முகத்தை பார்க்கையில் அன்னத்தின் முகத்தை மறந்து விடுவதற்கு ஒப்பானதாகும். ஒரே விடயம் ஒரு கட்டளைப் படிமத்தில் முயலாகவும் மற்றுமோர் கட்டளைப் படிமத்தில் அன்னமாகவும் தோற்றம் பெறும். இதனை விட கெஸ்ரோல் மாற்றம் ஒரே தடவையில் முழுமையானதொரு மாற்றமாகவும் கருதப்படும்.

கோட்பாட்டு மாற்றத்தில் நியாயம், பகுத்தறிவு கிடையாது அதாவது கோட்பாடுகளுக்கிடையேயான மாற்றம், அல்லது புரட்சி பகுத்தறிவு அல்லது நியாயித்தலின் வழியே நிகழுகின்ற ஒன்றல்ல. மாறாக குறித்த தோற்றப்பாட்டினை முழுமையாக புலக்காட்சிக்கு உட்படுத்திக் கொண்டதனால் நிகழ்கின்ற ஒன்றாகும்.
உதாரணம்: தொலமியின் புவி மையக் கொள்கை இருந்த அதே சந்தர்ப்பத்திலேயே கொப்பனிக்கஸ் சூரிய மையக் கொள்கையை முன்வைத்தார். இவை இரண்டுக்குமிடையே பகுத்தறிவு ரீதியாக தெரிவு செய்கின்றதொன்றில்லை. கருத்து ரீதியாக இவ்விரு கோட்பாடுகளுக்குமிடையே முரண்பாடு இருந்த போதிலும் கூட ஒன்று மற்றையதற்கு எதிரானது என எடுத்துக் கொள்வதற்கு போதுமான சாட்சியங்கள் இல்லை. கிடைக்கப் பெற்ற சாட்சியங்கள் அதிகளவிற்கு புவி மையக் கொள்கை சார்பாகவே இருந்தன. மரபு வழியாளர்கள் புவி மையக் கொள்கையினை சந்தேகப்படவுமில்லை. புவிமையக் கொள்கைக்கு சார்பாக போதுமான புலமையாளர்கள் இருந்ததினால் சூரிய மையக் கொள்கை அவர்களது கவனத்திற்கும் நம்பிக்கைக்கும் காரணமாகியது.

இவ்வாறு கட்டளைப் படிமங்களில் வாய்ப்புப் பார்த்தலோ பொய்ப்பித்தலோ சாத்தியமில்லை. காள் ஹெம்பல் குறிப்பிடுவது போன்று கட்டளைப் படிமம் ஒன்றினை வாய்ப்புப் பார்க்கக் கூடிய ஆற்றல் இல்லை மாறாக குறித்த கட்டளைப் படிமம் உருவாக்கப்பட்ட துறைசார்ந்த அனைவரினதும் அங்கீகாரம் அல்லது உடன்பாடு ஒன்றின் வழியே அனுமதி கிடைக்கப்பெறுகின்றதே ஒழிய வாய்ப்புப் பார்த்தலினால் நிகழ்ந்தது ஒன்றல்ல. அது ( கட்டளைப் படிமம் ) ஏற்றுக்கொள்ளப்படுவது அதிகளவு குறித்த துறை சார்ந்த விஞ்ஞானிகள் தமது கவனத்தினை செலுத்துவதனால் நிகழ்கின்றதொன்றாகும்.

அதேபோன்று பொப்பர் குறிப்பிடுவதன் படி கட்டளைப் படிமம் ஒன்றினை பொய்ப்பிக்க முடியாது. கட்டளைப் படிமம் ஆனது எப்போதும் தற்காலிக தொடர்பினைக் கொண்டதாகவே இருக்கும்.

கட்டளைப்படிமம் பொய்யானதாயின் அது எப்போதும் பொய்யானதொன்றாகவே இருக்கும் ஆதலால் கட்டளைப் படிமம் துறை சார்ந்த புலமையாளர்களின் ஏகோபித்த ஒருமைப்பாட்டின் வழியே நிராகரிக்கப்படுமே ஒழிய அதனை பொய்யானது என நிரூபிக்க முடியாது. இவ்வாறான நிகழ்வினாலேயே புதியதொரு கட்டளைப் படிமம் உருவாக்கப்படும். அதாவது குறித்த தோற்றப்பாட்டுடன் தொடர்புபட்ட நிகழ்வுகள் அனைத்தையும் முழுமையாக கவனத்தில் கொண்டு நிகழ்த்துவதன் மூலமே ஒரு கட்டளைப் படிமம் நிராகரிக்கப்பட்டு பிறிதொரு கட்டளைப் படிமம் உருவாக்கப்படுகின்றது.

அடுத்தடுத்த கோட்பாடுகளுக்கிடையே தொடர்புகள் சாத்தியமில்லை. கட்டளைப் படிம மாற்றம் விஞ்ஞானியின் நோக்கினையும் மாற்றியமைக்கும் அதாவது உலக நோக்கினை மாற்றியமைக்கும். இரு வேறுபட்ட பார்வை நோக்கினை உடைய ஒருவர் ஒரே விடயத்தினை இரண்டு கோணத்தில் பார்ப்பர். இந்த பார்வை மாற்றம் புலக்காட்சியின் மீதும் மாற்றத்தை ஏற்படுத்தும் அதாவது கெஸ்டால்ட் புலக்காட்சி மாற்றமாக அது அடையாளப்படுத்தப்படும். தூய புலக்காட்சி முடிவு என அர்த்தப் படுத்தக்கூடிய புலக்காட்சி ஒன்றில்லை.

இரண்டு கட்டளைப் படிமங்களையும் இரண்டு துறை சார் நிபுணர்கள் ஒரே மாதிரியாக நோக்க வேண்டும் என்ற பொது உடன்பாடும் இல்லை. இதனாலேயே கோட்பாடு அல்லது கட்டளைப் படிமங்களுக்கு இடையே தொடர்பாடல் கடினமானது எனக் கூறப்படுகின்றது. உதாரணம் : புவிமையக் கோட்பாடு இருக்கின்ற அதே நேரம் சூரிய மையக் கொள்கையும் இரு.ந்தது. தொலமி மற்றும் அவரது சகாக்கள் பூமி உலகின் மையம் என்பதில் உறுதியாக இருந்தனர். பூமி சுழல்வது என்பதனை அவர் ஒருபோதும் ஏற்றுக் கொள்ளவில்லை. ஏறத்தாழ 150 வருடங்கள் இந்த சர்ச்சை நீடித்தது. படிப்படியாக சூரிய மையக் கொள்கைக்கு சார்பான சாட்சியங்கள் கட்டியெழுப்பப்பட்டன. கெப்ளரின் விதிகள், கலிலியோவின் வானியல் கண்டுபிடிப்புக்கள் அவற்றுள் பிரதான விடயங்கள் ஆகின. இதன் மூலம் தர்க்க ரீதியாகவோ நியாயித்தல் ரீதியாகவோ முடிவினை பெற வேண்டியதாக இருக்கவில்லை. இறுதியில் சூரிய மையக் கொள்கை அடிப்படையாக அமைந்ததுடன் புவி மையக் கொள்கை பின்னடைவினைச் சந்தித்தது. பகுத்தறிவுடன் கூடிய முடிவு ஒன்று அங்கு இருக்கவில்லை. மாறாக அதிகளவு துறை சார் புலமையாளர்கள் சூரிய மையக் கொள்கைக்கு சார்பானவர்களாக அமைந்ததினால் மட்டுமே இது நிகழ்ந்தது. எதிரானவர்கள் படிப்படியாக தம்மை விடுவத்துக் கொண்டனர்.

இவ்வாறாக குறிப்பிடப்பட்டதன் படி கோட்பாடுகளில் மாற்றம் கெஸ்டால் மாற்றம் அல்லது கெஸ்டால் புலக்காட்சி மாற்றம் நிகழ்கின்றது எனக் குறிப்பிடப்படுகின்றது.

(ஆ) சார்புவாதிகளின் நிலைப்பாடுகளும் அவர்களது வாதங்களும் விஞ்ஞானம் தொடர்பாக நிறுவப்பட்டிருந்த நோக்கையும் முறையியலையும் தகர்த்தெறிகின்றன. அவ்வாறு அவர்கள் தகர்த்த கோட்பாடுகளின் அடிப்படைப் பண்புகள் யாவை? (04 புள்ளிகள்)

1. மரபு வழி முறையியலாளர்கள் ஏற்றுக்கொண்டிருந்த அவதான மொழி கோட்பாட்டு உள்ளடக்கத் தன்மையுடையதாக உள்ளது என்பதனை
2. விஞ்ஞானம் பகுத்தறிதலின் மீது கட்டியெழுப்பப்பட்டுள்ளதுடன் தர்க்க ரீதியான முடிவுக்கு இட்டுச் செல்கின்ற அடிப்படையினைக் கொண்டுள்ளது என்பதனை.
3. கோட்பாட்டு உருவாக்கத்தில் முன்னைய கோட்பாட்டிற்கும் பின்னைய கோட்பாட்டிற்கும் தொடர்பு உண்டு என்பதனை.
4. விஞ்ஞான முறை என உறுதியான முறை ஒன்று உண்டு என்பதனை.
5. விஞ்ஞான வளர்ச்சி நேர்நிலையான வளர்ச்சி என்பதனை.

**11.** (அ) பேக்கன், டேக்கார்ட் போன்றோர் முன்வைத்த முறையியல்களின் நோக்கமாக அமைந்த விழுமியங்கள் அல்லாத பகுத்தறிவுவாத, அனுபவவாத விஞ்ஞானங்கள் இன்று நடைமுறையில் இல்லை. பல்தேசிய கம்பனிகள், பூகோள அரசியல் அதிகாரம் என்பன நேரடியாகவோ மறைமுகமாகவோ சமகால விஞ்ஞானத்தைக் கட்டுப்படுத்துகின்றன. பூமியில் வாழும் உயிரகளுக்கு ஏற்பட்டுள்ள அச்சுறுத்தல் போன்றவற்றை அர்த்தமுள்ள வகையில் கட்டுப்படுத்துவதே இன்றைய விஞ்ஞானத்தின் தேவையாகும்." ஆராய்க.

வர்த்தக மயமாக்கத்தின் பிரதான பண்பாக அமைந்திருப்பது உலகப் பொருளாதாரம் அதன் செயற்பாடுகளின் வழியே மனிதர்கள் மற்றும் உயிரினங்களின் இருப்பிற்கு உகந்ததாக அல்லாத விடயங்களை உருவாக்குவதே ஆகும்.

இன்று எமது நாட்டில் கழிவகற்றல் நிலையங்கள் தொடர்பான பிரச்சினைகள் சூழல் மற்றும் சுகாதாரப் பிரச்சினைகளை ஏற்படுத்தியிருப்பது ஓர் எளிய உதாரணமாகும்.

பல்தேசிய கம்பனிகள் மற்றும் உலக ஆட்சியாளர்கள் விஞ்ஞானத்தினை தமக்கு ஏற்றதான வகையில் வழிப்படுத்திக் கொண்டும் அதனை உயர்ந்த அளவில் பயன்படுத்தி ஆயுதங்கள், குண்டுகள், ஏவுகணைகள் போன்றவற்றைப் பயன்படுத்தி யுத்தத்தைப் போலவே பொருளாதார யுத்தத்தில் ஈடுபடுகின்றனர். இவ்வாறான விடயங்களினால் "தூய அறிவு" கட்டியெழுப்பப்படுவதற்காக சுதந்திரமான விஞ்ஞானிகளால் உருவாக்கப்படுகின்ற விஞ்ஞானம் இன்று இல்லாமல் போய்விட்டது. சமய ரீதியான , ஒழுக்க ரீதியான விழுமியங்கள் மற்றும் மனிதர்களின் ஈடுபாட்டுடன் உருவாக்கப்படும் "உண்மை ஆய்வினை" பேக்கன் நோக்காகக் கொண்டிருந்தார். பகுத்தறிதலின் அடிப்படையில் கட்டியெழுப்பப்பட்ட நிச்சயமான அறிவினை டேக்கார்ட்ஸ் நோக்கமாகக் கொண்டிருந்தார். இன்று வெவ்வேறான அதிகாரப் போராட்டங்கள் அவற்றை குறுக்கீடு செய்துள்ளன.

உயிரினங்களை மனித குலத்தைப் பாதுகாக்கக் கூடிய அதற்கு உதவக்கூடிய ஒழுக்க ரீதியான மனித சமூகம் மற்றும் சூழலின் மீது நட்புறவுத்தன்மையுடன் கூடியதான விடயங்களை அடிப்படையாகக் கொண்ட விழுமியங்களை பின்பற்றிக் கொள்ளும் விஞ்ஞானமே இன்று அவசியமாகின்றது.

(06 புள்ளிகள்

)

(ஆ) "புராதன உலகில் நேர்த்தியான உருக்கு இலங்கையிலேயே உற்பத்தி செய்யப்பட்டது." மேற்படி கூற்றினை புராதன இலங்கையில் நிலவிய பின்வரும் விடயங்களுடன் தொடர்புபடுத்தி உறுதிசெய்க.

(i) உருக்கு உற்பத்திக்காக இரும்பினை உருக்கப் பயன்பட்ட நிலையங்கள்

(ii) வெப்பமேற்றுவதற்குப் பயன்படுத்தப்பட்ட தொழில்நுட்பங்களும் எரிபொருளும்

(iii) குறித்த கைத்தொழில் இலங்கையில் காணப்பட்டமைக்கான சான்றுகள் (06 புள்ளிகள்)

புராதன உலகில் மிகவும் தரம் வாய்ந்த இரும்பு இலங்கையில் உற்பத்தி செய்யப்பட்டது எனும் வெளிப்பாடு பின்வரும் விடயங்களின் வழியே உறுதியாகின்றன.

1. மத்திய மலைநாட்டில் தென் பகுதி பிரதேசங்களில் அண்மைக்காலத்தில் நிகழ்த்திய ஆய்வுகளின் போது பெலிகொல்ஓய மற்றும் சமனலவெவ நீர்த்தேக்கத் திட்டத்தை அண்டிய பிரதேசங்களில் கிடைக்கப் பெற்ற வரலாற்று சான்றுகள் (02 புள்ளிகள்)

2. வெப்பமேற்றுவதற்குப் பயன்படுத்தப்பட்ட எரிபொருள் மற்றும் தொழில்நுட்ப முறைமையாக இயற்கை காற்று சக்தி, விறகின் மூலம் கிடைக்கப் பெற்ற கரி, கணிதவியல் சார் சமன்பாடுகள் மற்றும் திரவ பொறிமுறையியல் தொழினுட்பம். (02 புள்ளிகள்)

3. மத்திய கிழக்கு நாடான சிரியாவில் பதிவாகியுள்ள தகவல்களின் படி இலங்கையில் மிக நேர்த்தியான, தரமான இரும்பு உற்பத்தி செய்யப்பட்டிருந்தமையும் அவ்விரும்பே அந்நாட்டில் பிரதானமாக பேசப்படுகின்ற "டமஸ்கஸ்வாள்" (சிரியாவின் தலைநகர் டமஸ்கஸ் ஆகும்.) எனும் வாளினை உற்பத்தி செய்வதற்குப் பயன்படுத்தப்பட்டது. இவ் வாள் உற்பத்தி இலங்கையிலிருந்து மத்திய கிழக்கு நாடுகளுக்கு ஒரு காலத்தில் இரும்பு ஏற்றுமதி செய்யப்பட்டது என்பதற்கு ஆதாரமாகின்றது.

(02 புள்ளிகள்)

(இ) "கி.பி. 15 ஆம் நூற்றாண்டு வரை சீனா மேற்குலகினைவிடத் திறமையான விஞ்ஞானத்தைப் பெற்றிருந்தது." நீர் உடன்படுகின்றீரா?

**அல்லது**

"ஆயுர்வேதமும் துளையீட்டு மருத்துவமுறையும் (Acupuncture) மேலைத்தேய மருத்துவமுறையைவிட வேறுபட்ட மாற்று மருத்துவ முறைமைகளும் நுட்பமுறைகளுமாகும்." காரணங்களைக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்

மத்திய காலத்தின் பின் இறுதிப்பகுதியில் நிகழ்ந்த சிந்தனை புரட்சியின் வெளிப்பாடாக நவீன கைத்தொழில் புரட்சி ஏற்பட்டதுடன் மேலைத்தேய விஞ்ஞானத்தில் வளர்ச்சி ஏற்பட ஆரம்பமாகியது.

எவ்வாறாயினும் கிறிஸ்து வருட 15 ஆம் நூற்றாண்டு வரை சீனா மேலைத்தேசத்தை விட விஞ்ஞான ரீதியில் முன்னேற்றமடைந்திருந்த நிலை ஒன்றினை அடைந்திருந்தது என்பதனை சீன விஞ்ஞான வரலாற்றினை நோக்குகின்ற போது அறியப்படுகின்றது.

1. வெடி மருந்து கண்டுபிடிப்பு
2. திசையறி கருவி உருவாக்கம்
3. அச்சுயந்திரக் கண்டுபிடிப்பு
4. காந்தம் கண்டுபிடிப்பு
5. துளையீட்டு மருத்துவம்

போன்றவை சீனா மேலைத்தேசத்தை விட விஞ்ஞான வளர்ச்சியில் உன்னத நிலையினைப் பெற்றிருந்தது என்பதனை எடுத்துக்காட்டுகின்றது.

அல்லது

ஆயுர்வேதம் மற்றும் ஊசி மருத்துவம் மாற்று வைத்திய முறைகளுள் பிரதான வகிபாக்தை வகிக்கின்றன. ஆயுர்வேத வைத்திய முறையானது பல நூண்டுகள் பழமை வாய்ந்த மருத்துவ முறையாகும். நீண்டகால மருத்துவ ஆய்வுகளின் முடிவாக பெற்றுக்கொள்ளப்பட்ட ஆயுர்வேத வைத்தியத்தில் பிரயோகிக்கப்படுகின்ற சிகிச்சை முறைகள் 20 ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியிலும் கூட உலகம் போற்றும் மாற்று வைத்திய சிகிச்சை முறையாக அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. ஆயுள்வேதத்தில் பயன்படுத்தப்படும் “பஞ்சகரும முறை வைத்தியம்”, விசக்கடி வைத்தியம், முறிவுச் சிகிச்சை வைத்தியம் போன்றவை இன்று மேற்கத்தேய வைத்தியத்தாலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட வைத்திய சிகிச்சை முறைகளாகின்றன.

துளையீட்டு மருத்துவமும் இன்று ஒரு மாற்று வைத்திய சிகிச்சை முறையாகவே கருதப்படுகின்றது. சீன துளையீட்டு மருத்துவ சிகிச்சை கொரிய துளையீட்டு மருத்துவ சிகிச்சை போன்றவை இலங்கையிலுள்ள உள்நாட்டு மருத்துவ வைத்திய சாலைகளில் செயற்படுத்தப்படுகின்றது.

இம்மாற்று வைத்திய சிகிச்சை முறைகளை பெற்றுக் கொள்வதன் மூலம் மேலைத்தேய மருத்துவச் சிகிச்சையின் விளைவாக நிகழ்கின்ற பக்க விளைவுகள் அதிகரிப்பு, நீண்டகாலமாக நோய் குணமாகாத நிலை போன்றவற்றிலிருந்து எம்மை தவிர்த்துக் கொள்ளலாம்.

(04 புள்ளிகள்)